# தமிழ் நூல் விவர அட்டவணை

பொதுப் பதிப்பாசிரியர் :

அ. ச. ஞானசம்பந்தன்

தமிழ்நாட்டு அரசினர் தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்ற
வெளியீடு.
1964.



# தமிழ் நூல் விவர அட்டவணை

# The Madras State Tamil Bibliography

## 1867-1900



முதல் தொகுதி—நான்காம் பகுதி

அனுபந்தம்

(Volume I—Part IV)

Supplement

பொதுப் பதிப்பாசிரியர் :

அ. ச. ஞானசம்பந்தன், எம்.ஏ.

செயலாளர்

தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றம்

பதிப்பாசிரியர் :

மு. சண்முகம்

கண்காணிப்பாளர்

தமிழ்நாட்டு அரசினர் தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்ற வெளியீடு

1964

விலை ரூ. 9·25

116/1—A1

# பதிப்புரை

---

இந்த அனுபந்தத் தொகுதி, 1867 முதல் 1900 வரையில் சென்னை மாநிலத்தில் அச்சிடப்பெற்று உரிமை பதிவு செய்யப்பெற்ற நூல்களுள், சென்னை ஆவணக்களரி நூல் நிலையத்தில் (Madras Record Office) உள்ளவை தவிர, எஞ்சிய நூல்களுக்கு உரியதாகும். இங்கே கிடைக்கப்பெறாத நூல்கள் வேறு எங்கேனும் இருந்தால் கிடைப்பதற்கும், நம் தமிழ் நாட்டில் அச்சிடப்பெற்ற நூல்களைப் பற்றிய வரலாற்றினை உள்ளவாறு அறியவும் இத்தொகுதி ஒரு வழிகாட்டியாக அமைகின்றது. இத் தொகுதியில் காணும் விவரங்கள் எல்லாம் அரசிதழின் (Gazette) ஆதாரம் கொண்டு தொகுக்கப்பட்டன வாகும்.

சென்னை மாநிலத்தில் அச்சிடப்பெறும் நூல்களின் உரிமையைப் பதிவு செய்யும் சட்டம் 1867-ஆம் ஆண்டு நடைமுறைக்கு வந்தது. இதன்படி பதிவு செய்யப்பெற்ற நூல்களின் விவரங்களை 1867-ஆம் ஆண்டு மூன்றும் காலாண்டு (Third Quarter) தொடங்கி, மூன்று திங்களுக்கு ஒருமுறை அரசிதழில் வெளியிட்டு வந்துள்ளனர். 1867–1868-ஆம் ஆண்டுகளில், 'சென்னை மாநிலத்தில் பதிவுசெய்யப்பெற்ற நூல்களின் பட்டியல்' (Memoranda of Books Registered in the Madras Presidency) என்னும் குறிப்புடன் வெளியிடப்பட்டிருக்கிறது. 1869-ஆம் ஆண்டு தொடங்கித்தான் தனி அனுபந்தமாக (Supplement) 'சென்னை மாநிலத்தில் அச்சிடப்பெற்ற நூல்களின் அட்டவணை' (Catalogue of Books Printed in the Madras Presidency) என்னும் தலைப்பின்கீழ் அரசிதழில் வரத்தொடங்கியது.

முதலில் பல மொழிகளில் வெளிவந்த நூல்கள், புத்தகங்கள், சிறு வெளியீடுகள் (Pamphlet), பத்திரிகைகள் ஆகியவை எல்லாம் அவை அவை பதிவு செய்யப்பெற்ற தொடர் எண் வரிசையிலேயே கொடுத்து விவரங்கள் தந்துள்ளனர். 1870-ஆம் ஆண்டு மூன்றாவது காலாண்டுப் பகுதி தொடங்கி, புத்தகம், சிறு வெளியீடு, கதம்பம் (Miscellaneous) எனப் பாகுபடுத்து, மொழிவாரியாக இம் மூன்று வகை நூல்களும் அவ்வப் பகுதியில் தரப்பட்டுள்ளன. இதனால் பதிவு எண்கள் ஒரே தொடர்பு இன்றி அமையும் நிலை ஏற்பட்டது. ஆகவே, ஒவ்வொரு பகுதிக்கும் பதிவு எண்ணோடு தனித் தனித் தொடர் எண்ணும் உடன் கொடுத்துக் காட்ட முற்பட்டுள்ளனர். 1872-ஆம் ஆண்டு இரண்டாம் காலாண்டுத் தொடக்கமாக மேற்கூறிய மூன்று பாகுபாட்டோடு பத்திரிகைகள் என்னும் ஒரு தனிப் பாகுபாடும் வகுக்கப்பட்டிருக்கிறது. எனவே, இது முதற்கொண்டு புத்தகங்கள், சிறு வெளியீடுகள், பத்திரிகைகள், கதம்பம் என நான்கு பகுதிகள் காணப்படுகின்றன. 1900-ஆம் ஆண்டு நான்காவது காலாண்டுத் தொடக்கமாக நூல்களின் பெயர்கள் ஆங்கிலத்தில் தரப்பட்டிருத்தலோடு அந்தந்த மொழி எழுத்துக்களிலும் கொடுக்கப் பட்டுள்ளன. பின்னர், 1905-ஆம் ஆண்டு நான்காவது காலாண்டுப் பகுதி தொடங்கி நூல்கள் பொருள் வாரியாகவும் அடைவுபடுத்தப்பட்டுள்ளன.

அரசிதழில் புத்தக விவரங்களைச் சென்ற நூற்றாண்டு முழுவதும் பல தலைப்புக்களில் பத்தி பத்தியாக அமைத்து வெளியிட்டு வந்திருக்கின்றனர். புத்தகத் தலைப்பு, புத்தகத்தில் அமைந்துள்ள மொழி, அதன் ஆசிரியர், மொழிபெயர்ப்பாசிரியர், பதிப்பாசிரியர் விவரம், நூற்பொருள், பதிப்பித்த அச்சகமும் ஊரும், பதிப்பித்தோரும் வெளியீட்டாளரும், அச்சிட்டு வெளிப்போந்த தேதி, புத்தகத்தின் இதழ்கள் அல்லது பக்கங்கள், புத்தகத்தின் வடிவம், பதிப்பு விவரம், பதிக்கப்பெற்ற பிரதிகளின் எண்ணிக்கை, அச்சிடப்பெற்றதா படியெடுக்கப்

பெற்றதா (Lithographed) என்னும் குறிப்பு, உரிமையாளரின் பெயரும் முகவரியும் ஆகியவற்றை அமைத்து, இறுதியாகச் சிறு குறிப்பும் (Remarks) எழுதப்பெற்றிருக்கிறது. பதிவு எண் முதலில் அமைக்கப்பெற்றிருக்கிறது. புத்தகம், சிறு வெளியீடு, பத்திரிகைகள், கதம்பம் என்னும் பாகுபாட்டில் ஒவ்வொரு பகுதிக்கும் தொடர் எண்ணும் முதலில் தரப்பெற்றிருக்கிறது. பதிவு எண், தொடர் எண் ஆகியவை சில ஆண்டுகளில் முந்தியும் பிந்தியும் ஆக முதற்கண் மாறிமாறியும் காணப்படுகின்றன. பொதுவாக மேற்குறித்த செய்திகள் எல்லாம் தலைப்புக்களாக மேலே வரத் தனித் தனிப் பத்திகளாக வகுத்துச் செய்திகள் கொடுக்கப் பட்டிருக்கின்றன.

இவற்றுள் இறுதிப் பத்தியாகிய சிறு குறிப்பு (Remarks) முக்கியமாகக் கவனிக்கத்தக்கது. இதில் பெரும்பான்மையான நூல்களுக்குச் சிறு குறிப்புக் கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இதன் வாயிலாக அந்நூல்களைப் பற்றிய செய்திகள் பல நமக்குப் புலனாகின்றன. ஒரு சில குறிப்புக்கள் தவறாகவும் உள்ளன. முக்கியமாக இப் பகுதியில் குறிக்கப் பெற்ற சில நூல்களின் காலங்கள் ஆராய்ச்சி அறிஞர்கள் ஒப்புக்கொள்ள இயலாதனவாம். இன்னும் சில குறிப்புக்கள் புதுமை ஆராய்ச்சி களால் காலப்போக்கில் வெவ்வேறு வகையில் மாறுபட்டு விட்டமையால், அவைகள் பழைய நம்பிக்கை என்னும் அளவில் கருதத்தக்கனவாம்.

இவ்வகையாக அரசிதழில் காணும் நூல் விவரங்களை ஆதாரமாகக் கொண்டே இந்த அனுபந்தத் தொகுதி தயாரிக்கப்பெற்றிருக்கிறது. இப்பொழுது கிட்டியுள்ள தமிழ் நூற்படிகள் தவிர ஏனையவற்றிற்கெல்லாம் அரசிதழில் காணுமாறே ஆசிரியர், பதிப்பாசிரியர், பதிப்பகம் முதலிய விவரங்களைத் தமிழில் எழுதித் தொகுத்து, அவற்றை டியூவி தசாம்சப் பாகுபாட்டில் பொருளடைவு செய்து அமைக்கப்பெற்றிருக்கிறது. இந்தத்

தொகுதியில் டியூவி எண் 700 வரை உள்ள பொருள்கள் இடம் பெற்றுள்ளன. அடுத்துவரும் ஐந்தாம் பகுதியில் எஞ்சிய பொருள்களும், அனு பந்தத் தொகுதியில் தரப்பெற்றுள்ள நூல்களுக்கு உரிய ஆசிரியர் அகரவரிசை, நூல் அகர வரிசை முதலியனவும் அமையும்.

சிறு குறிப்புப் பகுதி (Remarks) விளக்கமாக உள்ளவற்றிற்குப் பொருளைத் தெளிவுறத் தெரிந்து பாகுபடுத்த முடிந்தது. குறிப்பு இல்லாத நூல் களுக்கு அரசிதழில் கொடுத்த பொருள்களையே மேற் கொள்ள வேண்டியதாயிற்று. குறிப்புப் பகுதி அரசிதழில் கண்டவாறே மொழிபெயர்த்து அமைக் கப்பெற்றிருக்கிறது. இதில் குறித்த செய்திகள் பல ஆராய்ச்சியாளர்களுக்குப் பயன்படுவனவாம்.

ஒரு நூலின் ஆசிரியர், அல்லது மொழிபெயர்ப் பாசிரியர், அல்லது பதிப்பாசிரியர் பெயர்கள் ஒரே பத்தியில் குறிக்கப்பட்டுள்ளன. இதனால் ஆசிரியர் பெயரைத் தேர்ந்து எழுதுவதில் ஒரு சில மாறு பாடுகள் நேர்தல் இயல்பேயாகும். இதுவும் ஆராய்ச்சியாளர் கவனத்துக்கு உரியதாம். நூற் பெயர்கள் ஆங்கிலத்தில் எழுத்துப் பெயர்த்து எழுதியிருப்பவற்றிற்குப் (Transliteration) பெயர் மாறுபாடுகள் நேர இடமில்லை. ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து அமைத்த பெயர்கள் தமிழில் பெயர்க்கும்போது பெயரில் சில இடங்களில் மாறுபாடு நேரலாம். அரசிதழின் குறிப்புக்களால் கிடைக்கப்பெறாத நூல்களைப் பற்றிய முக்கியமான செய்திகள் எல்லாம் நமக்குத் தெரிய வருகின்றன.

இத் தொகுதியில் குறித்த நூல்களுள் சில தமிழகத்திலும், பாரத நாட்டின் பிற பகுதிகளிலும், இங்கிலாந்து, பிரான்ஸ் முதலிய மேனாடுகளிலும், பர்மா, மலேயா முதலிய கீழை நாடுகளிலும், இலங்கை, யாழ்ப்பாணத்திலும் உள்ள பழைய நூல் நிலையங்களில் காணுதல் கூடும். ஏட்டுச் சுவடிகளைத் தேடிச் சேகரிப்பது போல இந்நூல்களையும் தேடிப்

பெற்று, ஆராய்ச்சிப் பொதுநூலகத்தில் வைத்துப் போற்ற வேண்டுவது மிக அவசியமாகும். பெரும்பாலான பழைய நூல்கள் இந்நிலையத்தில் இருப்பதால், எஞ்சிய நூல்களையும் இதனுடன் சேர்த்து வைத்தால், ஆராய்ச்சி அறிஞர்களுக்கு ஓர் இடத்தில் அச்சில் வந்த பழைய தமிழ் நூல்களைப் பார்க்கும் வாய்ப்புக் கிட்டும்.

நம் தமிழ்நாட்டுப் பண்டை நூலகங்கள், கல்லூரி நூலகங்கள், புதுச்சேரி அரசாங்க நூலகம், முதலியவற்றில் உள்ள நூலகப் பட்டியல்களை நோக்கியதில் ஒரு சில நூல்கள் அவ்விடங்களில் உள்ளனவாகத் தெரியவருகின்றன. இன்னும் இது போன்று அச்சுப் படிகளைத் தொகுத்து வைத்திருக்கும் தனிப்பட்டோர் நூலகம், பொது நூலகம் முதலியவற்றில் தேடிப் பழந்தமிழ் நூற்படிகளைச் சேகரித்து இறவாது காப்பாற்றத் தக்க வழி காண்போமாக.

பதிப்பாசிரியர்

# பொருள் அட்டவணை


| டூவி எண். | பொருள். | |
|---|---|---|

## 100—தத்துவம்

| | | |
|---|---|---|
| 133 | சித்தியல் .. .. .. | 1 |
| 133.[1] | சித்தர் பாடல்கள் .. .. .. | 1 |
| 133.4 | மாந்திரிகம், ஜால வித்தை .. .. | 4 |
| 133.5 | சோதிடம் .. .. .. | 5 |
| 133 5 [1] | சாமுத்திரிகா இலட்சணம் .. .. | 15 |
| 133.5 [1] | நிமித்த நூல் .. .. .. | 16 |
| 133.5 [1] | பட்சி சாத்திரம் .. .. .. | 17 |
| 133.5 [1] | பல்லி சாத்திரம் .. .. .. | 18 |
| 133.5 [1] | ருது பலன் நூல் .. .. .. | 18 |
| 133.6 | கைரேகை சாத்திரம் .. .. | 18 |
| 170.[1] | பொது அற நூல்கள் : கவிதை .. | 19 |
| 170.[1] | பொது அற நூல்கள் : உரை நடை .. | 21 |
| 170 [1] | குழந்தைகட்கான அறநூல்கள் .. | 25 |
| 170.[1] | சதகங்கள் .. .. .. | 41 |
| 170.[1] | திரட்டு நூல்கள் .. .. .. | 45 |
| 181.43 | தருக்கம் .. .. .. | 51 |
| 181.48 | வேதாந்த தத்துவம் .. .. | 51 |
| 181 48 [1] | சைவ சித்தாந்த சாத்திரம் .. | 65 |
| 181.48 [1] | சைவ சித்தாந்த தத்துவம் .. | 66 |
| 181.48 [1] | வைணவ தத்துவம் .. .. | 76 |
| 181.482 | சங்கராச்சாரியரின் நூல்கள் .. .. | 85 |

## 200—சமயம்

| | | |
|---|---|---|
| 220.284 | கிருத்துவம் .. .. .. | 86 |
| 220.4 | விவிலிய நூல் மூலம் .. .. | 86 |
| 220.92 | விவிலிய நூல் மாந்தர் வரலாறு .. | 90 |
| 221.4 | பழைய ஏற்பாடு .. .. .. | 90 |
| 221.95 [1] | பழைய ஏற்பாட்டுக் கதைகள் .. | 91 |

| டியூவி எண். | பொருள். | பக்கம். |
|---|---|---|
| 222.16 | பத்துக் கட்டளைகள் .. .. | 92 |
| 223.2 | தோத்திரப் பாடல்கள் .. ... | 93 |
| 225.4 | புதிய ஏற்பாடு .. .. .. | 107 |
| 225.95 [1] | புதிய ஏற்பாட்டுக் கதைகள் .. .. | 109 |
| 226.2 | சுவிசேஷம் : மத்தேயு .. .. | 109 |
| 226.3 | சுவிசேஷம் : மார்க் .. .. | 110 |
| 226·4 | சுவிசேஷம் : லூக்கா .. .. | 111 |
| 226.5 | சுவிசேஷம் : ஜான் .. ... | 111 |
| 230 | கொள்கை விளக்கும் வேத சாத்திரம் .. | 112 |
| 232.9 | கிருஸ்துவின் வாழ்க்கை .. .. | 175 |
| 232.963 | மேரி .. .. .. .. | 177 |
| 232.97 | இயேசுவின் இரண்டாம் வருகை .. | 178 |
| 234 | இரட்சணியம் .. .. .. | 178 |
| 242 | தியானம் .. .. .. | 179 |
| 247.92 | சிலுவையும் பீடமும் .. .. | 180 |
| 252 | பிரசங்கங்கள் .. .. .. | 181 |
| 265·1 | ஞானஸ்நானம் .. .. .. | 182 |
| 265·2 | திடப்படுத்துதல் .. .. .. | 182 |
| 267 | கிறிஸ்துவச் சபைகள் .. .. | 182 |
| 284.1 | லூதர் .. .. .. .. | 186 |
| 291 | சர்வ சமயம் .. .. .. | 186 |
| 294 | இந்து சமயம் .. .. .. | 187 |
| 294.5 [1] | குரு—சீடர் உறவு .. .. .. | 194 |
| 294·53 | யோகம், நிஷ்டை, விக்கிரக வழிபாடு .. | 195 |
| 294.535 | தல புராணம் .. .. .. | 196 |
| 294·536 | விழாக்கள் .. .. .. | 208 |
| 294.538 | விரதங்கள் .. .. .. | 211 |
| 294.551 | சக்தி தோத்திரம் .. .. .. | 212 |
| 294·551 | சைவ சமயம் : துதி நூல்கள் .. | 216 |
| 294.551 | முருகன் தோத்திரம் .. .. | 221 |
| 294.55 | விநாயகர் தோத்திரம் .. .. | 224 |
| 294.551 | சைவ சமய நெறிகள் .. .. | 225 |

| டியூவி எண். | பொருள். | பக்கம். |
| --- | --- | --- |
| 294.551 | சைவ புராணங்கள் | 227 |
| 294.552 | பிரம்ம சமாசம் | 231 |
| 294.554 | வைணவ சமயம் : சமய நெறிகள் | 233 |
| 294.554 | வைணவ சமயம் : தோத்திரம் | 234 |
| 294.554 | வைணவ புராணங்கள் | 239 |
| 294 592 | புனித நூல்கள்—உபநிடதம் | 240 |
| 294.592 | பகவத் கீதை | 242 |
| 297 | இஸ்லாம் : பொது | 246 |
| 297.2 | இஸ்லாமியக் கொள்கை விளக்கம் | 253 |
| 297.3 | சமய வழிபாடு, தோத்திரம் | 254 |
| 297.5 | சமய ஒழுக்க நூல்கள் | 257 |
| 297.63 | நபிகள் வரலாறு | 258 |
| 297.64 | இஸ்லாமியப் பெரியார் வரலாறு | 259 |


## 300—சமுதாய சாத்திரங்கள்


| | | |
| --- | --- | --- |
| 301 | சமூக இயல் | 259 |
| 301·246 | சமூக முரண்பாடும் நிவாரணமும் | 259 |
| 301.424 | சமூகம்—பெண்கள் | 263 |
| 301·4243 | பொது மகளிர் | 264 |
| 301.426 | மனையற இயல் | 264 |
| 301.428 | விதவா விவாகம் | 266 |
| 301.450954 | இந்திய சாதிகள் | 267 |
| 320 | அரசியல் | 270 |
| 320.0954 | இந்திய அரசியல் | 270 |
| 330 | பொருளாதாரம் | 272 |
| 332.4 | பணம் | 272 |
| 336.2 | வரிகள் | 272 |
| 340 | சட்டம் | 272 |
| 343.0954 | கிரிமினல் சட்டம் | 272 |

| டியூவி எண். | பொருள். | பக்கம். |
|---|---|---|
| 347.2 | நில உரிமை .. .. .. | 273 |
| 347.5 | குற்றச் சட்டம் .. .. .. | 274 |
| 347.6 | இந்து சட்டம் .. .. .. | 274 |
| 347·94 | சாட்சிச் சட்டம் .. .. .. | 275 |
| 349.54 | இந்தியச் சட்டம் .. .. .. | 276 |
| 349.54 [1] | இந்தியச் சட்டம்—சென்னை .. .. | 280 |
| 371 | கல்வி .. .. .. | 283 |
| 371.3 | போதனா முறை .. .. .. | 284 |
| 371.73 | உடற் பயிற்சி .. .. .. | 286 |


## 400—மொழியியல்


| | | |
|---|---|---|
| 423.94811 | ஆங்கில தமிழ் அகராதி .. .. | 287 |
| 428.64 | ஆங்கிலம்—தமிழ் : பாடப் புத்தகம் .. | 290 |
| 491.2394811 | சம்ஸ்கிருத—தமிழ் அகராதி .. .. | 303 |
| 491.28 | சம்ஸ்கிருதப் பாட புத்தகம் .. .. | 303 |
| 494·811 | தமிழ் மொழி : பொது நூல்கள் .. | 303 |
| 494.8112 | எழுத்து—சொல் இலக்கணம் .. | 304 |
| 494.8112 | பொருள் இலக்கணம் .. .. | 307 |
| 494.8112 | யாப்பிலக்கணம் .. .. .. | 307 |
| 494·8112 | அணியிலக்கணம் .. . .. | 308 |
| 494.8112 | பொது இலக்கண நூல்கள் .. .. | 309 |
| 494.8113 | தமிழ் அகராதி .. .. | 311 |
| 494.8113 | சொல்—மாலை .. .. .. | 313 |
| 494.811342 | தமிழ்—ஆங்கில அகராதி .. .. | 317 |
| 494.811347 | தமிழ்—இலத்தீன் அகராதி .. .. | 318 |
| 494.8114 | நிகண்டு .. .. .. .. | 318 |
| 494.8115 | இலக்கணம்—பாடப் புத்தகம் .. | 321 |
| 494.8118 | தமிழ் கற்க உதவும் நூல்கள் .. | 329 |
| 494.81186 | பாடப் புத்தகங்கள் .. .. | 329 |

| டியூவி எண். | பொருள். | பக்கம். |
|---|---|---|

## 500—விஞ்ஞானம்

| | | |
|---|---|---|
| 510 | கணித இயல் .. .. .. | 417 |
| 511 | எண் கணிதம் .. .. .. | 419 |
| 523 | வான நூல் .. .. .. | 433 |
| 590 | விலங்கு இயல் .. .. .. | 434 |
| 598.2 | பறவைகள் .. .. .. | 436 |

## 600—தொழில் நுட்பமும் பயனுறு கலைகளும்

| | | |
|---|---|---|
| 610 | மருத்துவ இயல் .. .. .. | 436 |
| 610.3 | நிகண்டுகள், அகராதிகள் .. .. | 436 |
| 614 | சுகாதாரமும் தடுப்பு முறைகளும் .. | 437 |
| 615 | நோய் தீர்க்கும் முறைகள் .. .. | 440 |
| 615. [1] | ஆயுர்வேத வைத்தியம் .. .. | 448 |
| 615· [1] | சித்த வைததியம் .. .. | 453 |
| 615.942 | விஷ வைத்தியம் .. .. | 454 |
| 618·2 | பிரசவ வைத்தியம் .. .. | 455 |
| 618.9 | சுகாதாரமும் குழந்தை நோய்களும் .. | 455 |
| 620 | பொறியியல் .. .. .. | 455 |
| 621.11 | நீராவி இயந்திரம் .. .. | 455 |
| 621·3821 | தந்தி .. .. .. .. | 456 |
| 624 | சிவில் என்ஜினியரிங் .. .. | 456 |
| 630 | விவசாயம் .. .. .. | 457 |
| 633.54 | சணல் .. .. .. .. | 458 |
| 633.71 | புகையிலை .. .. .. | 458 |
| 634.9 | வன நூல் .. .. .. | 459 |
| 636 | கால்நடைப் பாதுகாப்பு .. — | 459 |
| 641 | சத்துணவு .. .. .. | 469 |
| 641.5 | குடும்பக்கலை .. .. .. | 460 |
| 655 | அச்சுக்கலை .. .. .. | 461 |
| 667.257 | வர்ணம் தயாரிப்பு .. .. | 462 |

| டியூவி எண். | பொருள். | பக்கம். |
|---|---|---|
| | **700—நுண் கலைகள்** | |


| 726·145 | கோவில் கட்டிடங்கள் .. .. | 462 |
|---|---|---|
| 728 | கட்டிடக் கலை .. .. .. | 462 |
| 741·29 | சித்திரக் கலை .. .. .. | 463 |
| 780 | இசைக் கலை .. .. .. | 464 |
| 784.0954 | வாய்ப்பாட்டு : கீர்த்தனம் .. .. | 464 |
| 784.0954 | வாய்ப்பாட்டு : பதம் .. .. | 476 |
| 784.0954 | வாய்ப்பாட்டு : வழிநடைப் பதம் .. | 477 |
| 784.0954 | வாய்ப்பாட்டு : ஜாவளி .. .. | 478 |
| 793.30954 | நடனம் .. .. .. | 479 |
| 793.73 | பழமொழிகள்—விடுகதைகள் .. | 480 |

# கோலன் பகுப்பு முறையில் பொருள் அட்டவணை

| | |
|---|---|
| z | பொதுவியல் |
| 1 | பொது அறிவியல் |
| 2 | நூலக இயல் |
| 3 | புத்தக இயல் |
| 4 | செய்தித் தாளியல் |
| A | அறிவியல் |
| B | கணிதம் |
| C | பௌதிகம் |
| D | பொறி இயல் |
| E | இரசாயனம் |
| F | தொழில் இயல் |
| G | உயிர் நூல் |
| H | புவி இயல் |
| HZ | சுரங்க இயல் |
| I | தாவர இயல் |
| J | விவசாயம் |
| K | விலங்கு நூல் |
| L | மருத்துவம் |
| M | பயனுறு கலைகள் |
| Δ | சித்தியல் |
| N | அழகுக் கலைகள் |
| O | இலக்கியம் |
| P | மொழி இயல் |
| Q | சமயம் |
| R | தத்துவம் |
| S | உளநூல் |
| T | கல்வி |
| U | நில நூல் |
| V | சரித்திரம் |
| W | அரசியல் |
| X | பொருளியல் |
| Y | சமூக இயல் |
| Z | சட்டம் |

## குறியீடுகளும் அவற்றின் விளக்கமும்

| | |
|---|---|
| உ.ப. .. | .. உரைநடை நூல் பக்கங்கள். |
| உ.ப. + செ.மூ.எ. | .. உரைநடை பக்கங்கள், செய்யுள் மூலம் எண்ணிக்கை. |
| உ.ப. + செ.மூ.ப. | .. உரைநடை பக்கங்கள், செய்யுள் மூலம் பக்கங்கள் (அல்லது) உரைநடையும் செய்யுளும் சேர்ந்து பக்கங்கள். |
| செ.மூ.எ. .. | .. செய்யுள் மூலம் எண்ணிக்கை. |
| செ.மூ.உ.எ. | .. செய்யுள் மூலமும் உரையும் எண்ணிக்கை. |
| செ.மூ.ப. .. | .. செய்யுள் மூலம் பக்கங்கள். |
| செ.மூ.உ.ப. | .. செய்யுள் மூலமும் உரையும் பக்கங்கள். |
| தொ.எ. .. | .. தொடர் எண். |
| தொ.து. .. | .. தொகுத்தது. |
| மொ.து. .. | .. மொழி பெயர்த்தது. |
| i. .. | .. நூலின் பெயர். |
| ii. .. | .. பதிப்பாசிரியரின் பெயரும் பதிப்பகமும். |
| iii. .. | .. நூல் பதிப்பித்த ஆண்டு. |
| iv. .. | .. நூலின் அளவு (உள்ளடக்கம்). |
| v. .. | .. நூலின் வடிவ அளவு. |
| vi. .. | .. விலை. |
| vii. .. | .. விளக்கம். |
| viii. .. | .. நூலின் பதிவு எண் குறிப்பு. |

| | |
|---|---|
| ....... .. .. | இவ்விதம் புள்ளி இட்ட இடங்கள் விவரம் தெரிய இயலாத பகுதிகளும் விளக்கம் எழுதப் பெருத பகுதிகளும் ஆகும். |
| & .. .. | ஒன்றுக்கு மேற்பட்ட ஆசிரியர், பதிப்பாசிரியர். பதிப்பகங்களைக் காட்டும். |

**குறிப்பு** :—ஒவ்வொரு நூலுக்கும் i முதல் viii எண் அளவாக மேற்குறித்த விவரங்கள் தரப்பெற்றிருக்கும். இவற்றுள் ஏதேனும் ஓர் எண் பகுதியின் விவரம் தெரியாவிடின், அங்கே புள்ளிகள் இட்டுக் காட்டப் பெற்றிருக்கும். ஒரு நூலுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட பதிப்புப் படிகள் காணப்படின் முதற் படிக்கே எட்டு எண் குறிப்புக்களும் கொடுக்கப்பெறும் பிந்திய படிகளுக்கு முந்திய பதிப்பில் இல்லாத புது விவரங்கள் மட்டுமே சுட்டப்பெற்றிருக்கும். பிந்திய படிகளில் விடுபட்டுள்ள எண்களுக்கு உரிய பொருள்கள் முதற் படியில் கண்டனவேயாம் என்பது இதன் குறிப்பு.

இத் தமிழ் நூல் விவர அட்டவணை வெளியீட்டில் மேற்கொண்ட பொருளடைவு, நூற் பொருட் குறிப்பின் அடைவு முதலியன பற்றி விரிவான செய்திகளை முதல் தொகுதியின் முதற் பகுதியில் உள்ள பதிப்புரையில் காணலாகும்.

## புத்தக வடிவ அளவுகள் (அங்குலத்தில்)

| | | | |
|---|---|---|---|
| Pott 8 vo | .. | .. | .. $6\frac{1}{8} \times 3\frac{7}{8}$ |
| F. cap 8 vo | .. | .. | .. $6\frac{3}{4} \times 4\frac{1}{4}$ |
| Crown 8 vo | .. | .. | .. $7\frac{1}{2} \times 5$ |
| Large Crown 8 vo | .. | .. | .. $8 \times 5\frac{1}{4}$ |
| Demy 8 vo | .. | .. | .. $8\frac{3}{4} \times 5\frac{5}{8}$ |
| Medium 8 vo | .. | .. | .. $9\frac{1}{2} \times 5\frac{3}{4}$ |
| Royal 8 vo | .. | .. | .. $10 \times 6\frac{1}{4}$ |
| Super Royal 8 vo | .. | .. | .. $10\frac{1}{4} \times 6\frac{3}{4}$ |
| Imp. 8 vo | .. | .. | .. $11 \times 7\frac{1}{2}$ |
| Pott 4 to | .. | .. | .. $7\frac{3}{4} \times 6\frac{1}{8}$ |
| F. Cap 4 tó | .. | .. | .. $8^{1} \times 6\frac{3}{4}$ |
| Crown 4 to | .. | .. | .. $10 \times 7\frac{1}{2}$ |
| Demy 4 to | .. | .. | .. $11\frac{1}{4} \times 8\frac{3}{4}$ |
| Medium 4 to | .. | .. | .. $11\frac{1}{4} \times 9$ |
| Royal 4 to | .. | .. | .. $12\frac{1}{2} \times 10$ |
| Super Royal 4 to | .. | .. | .. $13\frac{1}{2} \times 10\frac{1}{4}$ |
| Imp. 4 to | .. | .. | .. $15 \times 11$ |

# தமிழ் நூல் விவர அட்டவணை

## 100—தத்துவம்

### 133—சித்தியல்

#### 133. [1]—சித்தர் பாடல்கள்

**அகப்பேய்ச் சித்தர்**

1. i. *அகப்பேய்ச் சித்தர் பாடல் :* இரண்டாம் பதிப்பு; ii. டி. இ. பரசுராம முதலி ; பரப்பிரம்ம அச்சியநதிரசாலை, சென்னை; iii. நவம்பர் & டிசம்பர், 1879 ; iv. செ. மூ. ப. 16 ; v. 16 mo; vi. 0–0–3 ; vii. எளிய தமிழ் நடையில் அமைந்த சித்தர் களின் பாடல்களில் இது ஒன்றாகும். இதில் மதக் கருத்துக்களும் நீதிக் கருத்துக்களும் அடங்கியுள்ளன. viii. 132/1879/IV.

△ 28x33

**கடுவெளிச் சித்தர்**

2. i. *கடுவெளிச் சித்தர் மாலை :* முதற் பதிப்பு ; ii. கருணாநந்த சுவாமி & சி. கேசவ முதலி ; பிரபாகர அச்சுக்கூடம், சென்னை; iii. பிப்ரவரி, 1871 ; iv. செ.மூ.ப. 8 ; v. 8 vo ; vi. 0–0–3 ; vii. பழைய சித்தர்கள் தமிழில் ஆக்கிய பல்வேறு நூல்களில் ஒன்றாகிய இது எளிமையும், அழகும், அறப்பொருள் விளக்கமும், பக்திச் சுவையும் நிரம்பிய நூலாகும். viii. 78/1871/I. △ 28

3. i. *கடுவெளிச் சித்தர் பாடல் :* முதற் பதிப்பு : ii. டி. பரசுராம முதலி ; பரப்பிரம்ம முத்திராக்ஷரசாலை ; iii. பிப்ரவரி, 1878 ; v. 16 mo ; vii. சைவ சமயத்தை அறிவுறுத்துவதாக அமைந் துள்ளது. viii. 113/1878/I.

△ 28

4. i. கடுவெளிச் சித்தர் பாடல் : மூன்றாம் பதிப்பு ; ii. டி. இ. பரசுராம முதலி ; பரப்பிரம்ம அச்சியந்திரசாலை, சென்னை ; iii. மார்ச், 1879 ; vii. போதனைக் கருத்துக்கள் அடங்கிய சித்தர்கள் பாடல்களில் இதுவும் ஒன்று. viii. 67/1880/II.

△28

5. i. கடுவெளிச் சித்தர் பாடல் : முதற் பதிப்பு ; ii. டி. சபாபதிப் பிள்ளை, சென்னை ; iii. செப்டம்பர், 1880 ; vii. மிக எளிய நடையில் அமைந்த அத்வைதக் கருத்துக்களைக் கொண்ட சித்தர் பாடல்களில் ஒன்றாகும் இது. viii. 16/1880/IV.

△28

6. i. கடுவெளிச் சித்தர் பாடல் : நான்காம் பதிப்பு ; ii. டி. இ. பரசுராம முதலி ; பரப்பிரம்ம அச்சியந்திரசாலை, சென்னை ; iii. மார்ச், 1882 ; vii. சித்தர்களில் ஒருவரால் இயற்றப்பட்ட இப் பாடல், நீதிக் கருத்துகளும் வேதாந்தத் தத்துவங்களும் கொண்டு அமைந்த பழமையான பாடலாகும். viii. 73/1882/II.

△28

7. i. கடுவெளிச் சித்தர் பாடல் : முதற் பதிப்பு ; ii. சி. பெருமாள் நாடார் ; சின்னைய நாடார் பிரஸ், திருப்பத்தூர் ; iii. அக்டோபர், 1888 ; viii. 159/1888/IV.

△28

**கருவூரார்**

8. i. கருவூரார் பூஜா விதி : ஐந்தாம் பதிப்பு ; ii. வி. நாராயணசாமி முதலியார் ; பிரபாகர அச்சுக்கூடம், சென்னை; iii. செப்டம்பர், 1874 ; iv. செ.மூ.ப. 16 ; v. 16 mo ; vi. 0–0–6 ; vii. சித்தர்களின் வழிபாட்டு முறை. viii. 96/1874/IV.

△28

**குதம்பைச் சித்தர்**

9. i. குதம்பைச் சித்தர் பாடல் : ஏழாம் பதிப்பு ; ii. கருணாநந்த சுவாமிகள் & சி. நாராயணசாமி முதலியார் ; பிரபாகர பிரஸ், சென்னை ; iii. ஜனவரி, 1874 ; iv. செ.மூ.ப. 8 ; v. 16 mo ; vi. 0–0–3 ; vii. சித்தர் பாடல்களில் சிறந்தவை. இப் பாடல்கள் இலக்கண வரம்பிற்கு உட்படாமலும், எளிய பேச்சு நடையிலும் அமைந்துள்ளன. இந்துமத உண்மைகளை மறுப்பதாயும், கடவுள் நம்பிக்கை அற்றது போலத் தோற்றும்படியாயும் உள்ள பாடல்கள் இவை. viii. 185/1874/I.

△28x31

10. i. குதம்பைச் சித்தர் பாடல் : இரண்டாம் பதிப்பு ; ii. சி. மாணிக்க முதலி அண்டு கம்பெனி ; மனோன்மணி விலாசம் பிரஸ், சென்னை; iii. மார்ச், 1879 ; vii. அத்வைதக் கருத்துக்களைக் கொண்ட சித்தர்களுள் ஒருவரால் இயற்றப்பட்ட நற்போதனைப் பாடல்கள். இது ஆஸ்திகக் கொள்கையை வலியுறுத்துவது. இந் நூலின் உரை ஆசிரியர் அருணாசல முதலியாராவர். viii. 46/1880/II.

Δ28x31

11. i. குதம்பைச் சித்தர் பாடல் : நான்காம் பதிப்பு ; ii. டி. கன்னியப்ப முதலி ; பரப்பிரம்ம அச்சியந்திரசாலை, சென்னை ; iii. ஏப்ரல், 1886 ; vii. அத்வைத தத்துவத்தைக் கூறும் இம் முக்திப் பாடல்கள் சித்தர் ஒருவரால் இயற்றப்பெற்றனவாகும். viii. 137/1886/II.

Δ28x31

**சிவவாக்கியர்**

12. i. சிவவாக்கியம் : முதற் பதிப்பு ; ii. டி. இ. பரசுராம முதலி, சென்னை ; iii. ஆகஸ்ட், 1878 ; iv. செ.மூ.ப. 24 ; v. 16 mo; vi. 0–0–6 ; vi . சிவனைத் துதிக்கும் இப்பாடல் அத்வைத வேதாந்த தத்துவத்தைக் கொண்டுள்ளதாய் உள்ளது. இது பதினைன்கு நூற்றாண்டுகளுக்கு முன்னால் எழுதியதாகச் சிலரால் கருதப்படுகிறது. viii. 200/1878/III.

Δ28

**பாம்பாட்டிச் சித்தர்**

13. i. பாம்பாட்டிச் சித்தர் பாடல் : ஐந்தாம் பதிப்பு ; ii. சி. நாராயணசாமி முதலியார் ; பிரபாகர அச்சுக்கூடம், சென்னை ; iii. செப்டம்பர், 1874 ; iv. செ மூ.ப. 32 ; v. 16 mo ; vi. 0–0–6 ; vii. ஒரு சித்தர் தன்னுடைய உடலை ஆலமரப்பொந்தில் வைத்துவிட்டு அரசனுடைய உடலுக்கு உயிர்கொடுத்த கதையைச் சொல்லுவது. viii. 91/1879/IV.

Δ28x26

14. i. பாம்பாட்டிச் சித்தர் பாடல் : மூன்றாம் பதிப்பு ; ii. டி. இ. பரசுராம முதலி ; பரப்பிரம்ம அச்சியந்திரசாலை, சென்னை ; iii. நவம்பர், 1880 ; vii. பாம்பை வசமாக்கும் மகுடிமெட்டில் அமைந்த போதனையூட்டும் தத்துவப் பாடல்கள். viii. 108/1880/IV.

Δ28x26

## 133. 4—மாந்திரிகம், ஜாலவித்தை

**கண்ணுராவ், ஏ.**

15. i. ஜால வித்தை செய்யும் விதம் ; முதற் பதிப்பு ; ii. ஆர். நாராயணசாமி ஐயர் ; பிரம்ம வித்தியா அச்சுக்கூடம், சிதம்பரம்; iii. மே, 1890 ; iv. உ. ப. 8 ; v. 16 mo ; vi. 0–0–3 ; vii. மாந்திரிகம், ஜாலவித்தை இவை பற்றிய நூல். viii. 181/1890/II.

△,87

**கவுபால சித்தர்**

16. i. ஆணிக்கோவை : முதற் பதிப்பு ; ii. டி. சபாபதி பிள்ளை ; iii. நவம்பர், 1880 ; iv. செ.மூ.ப. 16 ; v. 16 mo ; vi. 0–1–0 ; vii. ரசவாத வித்தைகளைப் பற்றிய பாடல்கள் கொண்டது. அரேபியர்களைப் போல் ரசவாத வித்தையைத் தெரிந்து வைத்திருந்த சித்தர்களில் ஒருவரால் இயற்றப்பட்டது இது. viii. 86/1880/IV.

△,87

**குப்புசாமிராஜு, வி.**

17. i. ஹடயோகப் பிரதீபிகை : முதற் பதிப்பு ; ii. வி. கோவிந்தன் அண்டு பிரதர்ஸ் ; கீர்வாண வாணிவிலாச அச்சுக்கூடம், திருவாதி ; iii. ஜனவரி, 1897 ; iv. உ. ப. 284 ; v. 8 vo ; vi. 1–8–0 ; vii. ராஜயோகத்திற்கு மறுதலையான ஹடயோகம் என்ற யோகப்பயிற்சி பற்றிய வடமொழி நூல். சுவாசத்தை நிறுத்தித் தியானித்திருத்தலை ஆதாரமாகக் கொண்டுள்ள பல யோகப் பயிற்சிகளைக் கொண்டுள்ளது. viii. 52/1897/I.

△,87

**சிவராமலிங்க சுந்தர முதலி, டி. என்.**

18. i. சிவராமலிங்க சுந்தரம்: முதற் பதிப்பு ; ii. வி. எஸ். சபாபதி நாவலர் ; சித்தாந்த வித்தியானுபாலன இயந்திரசாலை, சென்னை; iii. அக்டோபர், 1889 ; iv. செ.மூ.ப. 34 ; v. 8 vo ; vi. 0–2–0 ; vii. சமய அறிவு பற்றிய தமிழ் உரை நடையோடு கூடிய செய்யுள் நூல். இது குழந்தைகளின் வியாதிகளைப் போக்குவதற்கான மந்திரங்களைக் கொண்டுள்ளது. viii. 122/1890/I.

△,87

19. i. புலிப்பாணி ஜாலம் : மூன்றும் பதிப்பு ; ii. டி. இ. பரசுராம முதலி ; பரப்பிரம்ம அச்சியந்திரசாலை, சென்னை ; iii. மார்ச், 1879 ; iv. செ.மூ.ப. 50 ; v. 8 vo ; vi. 0–3–0 ; vii. ஜாலவித்தை, வசியம், கைவித்தை ஆகிய தந்திரங்களை விளக்கும் பாடல்கள். viii. 59/1880/II.

△,87

**முனுசாமி முதலி, எஸ்.**

20. i. விநோத ஜாலக் கண்ணாடி : முதற் பதிப்பு ; ii. பி. சுந்தர முதலி; சுந்தர விலாசம் பிரஸ், சென்னை ; iii. ஏப்ரல், 1889 ; iv. உ. ப. 20 ; v. 8 vo ; vi. 0–1–0 ; vii. இந்து மந்திர முறைகள், ஜால வித்தை நிகழ்ச்சிகள் ஆகிய இவைகளை ஆராயும் ஒரு சிறு நூலாகும் இது. viii. 45/1889/II.

Δ,87

**முனுசாமி முதலி, சி.**

21. i. வசியம், மந்திரம் போன்ற மூட நம்பிக்கைகள் : முதற் பதிப்பு ; ii. சி. எல். சொசைட்டி ; எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1893 ; iv. உ.ப. 24 ; v. 16 mo ; vi. 0–0–3 ; vii. . . . ; viii. 37/1893/III.

Δ,87

22. i. ஜாலக் கண்ணாடி : பகுதி-1 : முதற் பதிப்பு ; ii. பி. எ. குப்புசாமி முதலி ; தொண்டைமண்டலம் அச்சுக்கூடம், சென்னை; iii. அக்டோபர், 1889 ; iv. உ. ப. 10 ; v. 8 vo ; vi. 0–1–0 ; vii. வசியம், கண்கட்டி இவற்றோடு தொடர்புடைய இந்து மாந்திரிகம், ரசாயனம் மற்றும் பல பொருள்கள் தயாரிப்பது பற்றியது இந்த நூல். viii. 147/1889/IV.

Δ,87

23. i. ஜாலக் கண்ணாடி—பகுதி-2 : முதற் பதிப்பு ; ii. பி. எ. குப்புசாமி முதலி ; தொண்டை மண்டலம் அச்சுக்கூடம், சென்னை ; iii. அக்டோபர், 1889 ; iv. உ. ப. 10 ; v. 8 vo; vi. 0–1–0 ; vii. ........ ; viii. 148/1889/IV.

Δ,87

## 133.5—சோதிடம்

**அகத்தியர்**

24. i. வருஷாதி நூல் : முதற் பதிப்பு ; ii. சி. வீராசாமி நாயுடு; வித்தியா விநோதினி அச்சுக்கூடம் ; iii. ஜூலை, 1877 ; iv. செ.மூ.உ.ப. 191 ; iv. 16 mo ; vi. 0–4–0 ; vii. இந்து வருடங்கள் அறுபது பற்றிக் கூறும் செய்யுளும் உரையும் கலந்து அமைந்த நூல். ஒவ்வோர் ஆண்டும் நேரும் முக்கிய நிகழ்ச்சிகள் பற்றி விவரிப்பது. viii. 15/1877/III.

Δ2 : 864

25. i. ஜயமுனி வாக்கியம் : முதற் பதிப்பு ; ii. சி. வீராசாமி நாயுடு ; வித்தியா விநோதினி அச்சுக்கூடம், புரசவாக்கம் ; iii. ஜூலை, 1877 ; iv. உ.ப. 96 ; v. 8 vo ; vi. 0-4-0 ; vii. கிரகங்களால் உயிரினங்கள் அடையும் நன்மை, தீமை பற்றியும், அந்த நன்மை தீமைகள் நீடித்து இருக்கும் காலத்தைப் பற்றியும் விவரிக்கும் ஜயமுனிவர் எழுதிய நூலின் தமிழ் மொழிபெயர்ப்பு. viii. 14/1877/III.

△2: 864

அண்ணாவையங்கார்

26. i. வாக்கிய பஞ்சாங்கம் : முதற் பதிப்பு ; ii. பி. குமரய்யர்; கலாவதி அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜனவரி, 1868 ; iv. உ.ப. 20 ; v. 8 vo ; vi. 0-2-0 ; vii. தென்னிந்தியாவில் நடைமுறையில் உள்ள சோதிட கணிதம் அல்லது வாக்கிய முறையை ஒட்டி உள்ளது இந்த நூல். viii. 38/1868/I.

△2 : 864

அருணாசல முதலி

27. i. பால கிரஹ தோஷ நிவர்த்தி : மூன்றாம் பதிப்பு ; ii. டி. ரத்ன முதலி ; கலைக்ஞான அச்சியந்திரசாலை, சென்னை ; iii. டிசம்பர், 1880 ; iv. உ.ப. 16 ; v. 8 vo ; vi. 0-1-0 ; vii. குழந்தைகளுக்கு ஏற்படக்கூடிய கிரஹ தோஷங்களையும் அதனால் ஏற்படக்கூடிய விளைவுகளை நீக்குவதற்குச் செய்யவேண்டிய பூசைகளையும் பற்றிக் கூறுவது. viii. 97/1881/II.

△2 : 864

ஆரியமுத்துப் பிள்ளை, வி.

28. i. சுகர்நாடி அல்லது சோதிட சிந்தாமணி : முதற் பதிப்பு ; ii. வி. ஆரியமுத்துப் பிள்ளை ; இந்து யூனியன் அச்சுக்கூடம், சென்னை ; iii. ஆகஸ்ட், 1897 ; iv. உ.ப. 810 ; v. 8 vo ; vi. 3-8-0 ; vii. கிரக பயனால் ஒருவருக்கு ஏற்படும் பலாபலன்களைப் பற்றிய சோதிட நூல். viii. 150/1897/III.

△2 : 864

இடைக்காடர்

29. i. வருஷாதி நூல் ; ii. எல். வேங்கடராமானுஜுலு நாயுடு ; ஸ்ரீநிதி அச்சுக்கூடம், சென்னை ; iii. நவம்பர், 1878 ; iv. செ.மூ. உ.ப. 192 ; v. 16 mo ; vi. 0-0-3 ; vii இந்த வருஷங்கள் அறுபது பற்றிய பாடல். ஒவ்வோர் ஆண்டும் உளதாகும் பலாபலன்கள் பற்றிக் கூறுவது. இடைக்காடரால் இயற்றப்பெற்றதாகக் கருதப்படும் இந்நூல் தற்காலப் பண்டிதர் ஒருவரால் பரிசோதித்துப் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. viii. 180/1878/IV.

△2 : 864

**இராமலிங்க முனிவர்**

30. i. *சந்தான தீபிகை* : முதற் பதிப்பு ; ii. சி. செந்தூராம் லாலா, நாராயின்பாளையம், சென்னை ; iii. ஜனவரி, 1869 ; iv. செ.மூ.ப. 64 ; v. 16 mo ; vi. 0-3-0 ; vii. எளிய தமிழ்ச் செய்யுட்களால் ஆகிய சோதிட நூல். viii. 53/1869/I.

△2 : 864

**இராமாநுஜ தாதாச்சாரி**

31. i. *ஜோதிஷ மௌடீக மலபுத்ர பாவம்* : முதற் பதிப்பு ; ii. இராமாநுஜ தாதாச்சாரி ; ஜகத்குரு அச்சுக்கூடம், நடுக்காவேரி ; iii. பிப்ரவரி, 1900 ; iv. உ.ப. 37 ; v. 8 vo ; vi. 0-10-0 ; vii. ஒருவருககுக் குழந்தை பிறக்குமா பிறக்காதா என்று சோதிடம் கூறும் வடமொழி நூல் ; தமிழ் வியாக்கியானத்தோடு கூடியது. viii. 334/1900/I.

△2 : 864

**கிருஷ்ணமாச்சாரி, வி.**

32. i. *ஆரூடரத்நாகரம்* : முதற் பதிப்பு ; ii. தாம்ஸன் அண்டு கோ ; மினர்வா அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜூன், 1897 ; iv. உ.ப. 146 ; v 8 vo ; vi. 1-0-0 ; vii. ஒருவர் எப்பொழுது செல்வந்தர் ஆவார் அல்லது ஏழை ஆவார் என்பது பற்றியும், எபபொழுது யாத்திரை செய்வார் எனபது போல்வன பற்றியும் கூறும் சோதிடப் பொருள் பற்றியது. viii. 70/1897//III.

△2 : 864

**கிருஷ்ணய்யா**

33. i. *பஞ்சாங்கம், ஜனவரி 1870—மார்ச், 1892* : முதற் பதிப்பு ; ii. ஜெ. கிருஷ்ணய்யா ; சரஸ்வதி நிலையம் அச்சுக்கூடம், நெல்லூர் ; iii. அகடோபர், 1891 ; iv. உ ப. 132 ; v. 8 vo; vi. 0-12-0 ; vii. இருபத்திரண்டு ஆண்டுகளுக்கான பஞ்சாங்கம் தரப்பட்டுள்ளது. இது தெலுங்கு பேசும் மக்களுக்காக ஆக்கப்பட்ட போதிலும், ஆங்கில, தமிழ் ஆண்டுகளும் தரப்பட்டுள்ளன. viii. 90/1891/IV.

△2 : 864

**குப்புசாமி ஐயர், வி.**

34. i. *பஞ்சாங்க நிர்ணயம்* : முதற் பதிப்பு ; ii. வி. குப்புசாமி ஐயர் ; கலாரத்நாகர அச்சுக்கூடம், சென்னை ; iii. ஆகஸ்ட், 1892 ; iv. உ.ப. 202 ; v. 16 mo ; vi. 0-1-0 ; vii. 1891-ம் ஆண்டு, டிசம்பர் மாதம், கோயம்புத்தூரில் நடைபெற்ற மாநாடு பற்றியும், ஆங்கு நிறைவேறிய பஞ்சாங்கத் திருத்தங்கள் பற்றியும் உள்ள நூல். viii. 199/1892/III.

△2 : 864

**குப்புசாமி நாயுடு, எம். டி.**—தொ. து.

**35.** i. ஆரூட சாஸ்திரம்: முதற் பதிப்பு; ii. எம். டி. குப்புசாமி நாயுடு; பாரதி விலாசம் அச்சுக்கூடம், சென்னை; iii. டிசம்பர், 1893; iv. செ.மு.ப. 6; v. 8 vo; vi. 0–1–0; vi. வால்மீகி முனிவர் எழுதியதாகக் கொள்ளப்படும் சோதிட நூல். கேள்வி-பதில் ரூபத்தில் உள்ளது. viii. 163/1893/IV.

△2 : 864

**குப்புசாமி நாயுடு, டி.**

**36.** i. சந்திராபரண ஜாதக வெண்பா: முதற் பதிப்பு; ii. எஸ். முத்தையாபிள்ளை; சிரோன்மணி விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. செபடம்பர், 1895; iv. செ.மு.ப. 24; v. 8 vo; vi. 0–1–0; vii. சிவன் உமாதேவிக்கு வழங்கிய உரையாக அமைந்துள்ள இச் சோதிட நூல் ஜாதகத்தின் உதவியால் ஒருவரின் வருங்காலத்தை அறியலாம் என்பதை விளக்குகிறது. viii. 198/1895/III.

△2 : 864

**37.** **குழந்தையின் சாதகம்**: முதற் பதிப்பு; ii. எம்.ஆர்.டி. அண்டு பி. சொசைட்டி; சி.கே.எஸ். பிரஸ்; iii. செப்டம்பர், 1875; iv. உ.ப. 16; v. 32 mo; vi. 0–0–1; vii. . . . . ; viii. 11/1876/I.

△2 : 864

**கோவிந்தராஜ முதலி, டி.**

**38.** i. நவரச சிந்தாமணி: முதற் பதிப்பு; ii. டி. கோவிந்தராஜ முதலி; எக்ஸல்சியர் அச்சுக்கூடம், சென்னை; iii. ஜனவரி, 1891; iv. உ.ப. 113; v. 16 mo; vi. 0–2–0; vii. அட்டவணை முறையில் தரப்பட்டுள்ள ஒரு சோதிட நூல். viii. 156/1891/I

△2 : 864

**சந்திரசேகர கவிராயர், டி.**

**39.** i. வருஷாதி நூல்: இரண்டாம் பதிப்பு; ii. எம். பெரிய தம்பி முதலி; கலாநிதி அச்சுக்கூடம், சென்னை; iii. டிசம்பர், 1867; iv. உ.ப. 159; v. 16mo; vi. 0–8–0; vii. அறுபது ஆண்டுகளில் நடக்க இருக்கும் நிகழ்ச்சிகளைப் பற்றியும், நல்லவை, கெட்டவை ஆகியவற்றைப் பற்றியும் கூறும் உரைநடையில் அமைந்த இச் சோதிட நூல் சிறந்த நூல் அல்ல. இந்நூலோடு மதுரைச் சங்கத்தினராகிய இடைக்காடர் ஆக்கிய பாடல்களும் இதில் சேர்க்கப்பட்டுள்ளன. viii. 34/1868/I.

△2 : 864

40. i. வருஷாதி நூல் : முதற் பதிப்பு ; ii. எ. அருணாசல முதலி யார் ; திருமகள் விலாச அச்சுக்கூடம் ; iii. மே, 1875 ; iv. செ.ஃ.உ.ப. 92 ; v. 16 mo ; vi. 0–2–6 ; vii. அறுபது ஆண்டு களில் ஒவ்வோர் ஆண்டிற்குமுள்ள நன்மை, தீமைகளைக் கூறும் செய்யுளும் உரையுமாக அமைந்த ஒரு சோதிட நூல். viii. 101/1875/II.

△2: 864

**சின்னசாமி பிள்ளை, டி.**

41. i. நந்தி வாக்கியம் : முதற் பதிப்பு ; ii. டி. சின்னசாமி பிள்ளை ; மலைக்கோட்டை அச்சுக்கூடம், திருச்சிறுப்பள்ளி ; iii. ஆகஸ்ட், 1890 ; iv. உ.ப. 129 ; v. 8 vo ; vi. 1–4–0 ; vii. சிவனுடைய தெய்வக் காளையாகிய நந்தி எழுதியதாகக் கொள்ளப்படுவது இந்நூல். சாதகம் கணிக்கும் விதம் பற்றியும், பிறந்த பொழுது ஒருவர் மீது நட்சத்திரங்கள் செலுத்தும் சக்தி பற்றியும் கூறும் நூல். viii. 131/1890/III.

△2: 864

**சீனிவாசராகவ ஐயங்கார்**

42. i. உசித கால சங்கிரகம் : முதற் பதிப்பு ; ii. சீனிவாச ராகவ ஐயங்கார் ; இந்து பிரஸ், சென்னை ; iii. மே, 1887 ; iv. உ.ப. 8 ; v. 32 mo ; vi. 0–2–0 ; vii. மத சம்பந்தமான சடங்கு களைச் செய்வதற்குரிய காலங்களைக் கூறுவதாகும் இந்நூல். viii. 213/1888/II.

△2: 864

**சீனிவாசராவ், டி.**

43. i. உலக காலக் கணித களஞ்சியம் (Universal Encyclopaedic Calender— English–Tamil) : முதற் பதிப்பு ; ii. எம. கிருஷ்ண சாமி செட்டி ; மெமோரியல் அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜூன், 1892 ; iv. உ.ப. 108 ; v. 8 vo ; vi. 1–8–0 ; vii. வானநூல், சோதிடம் பற்றிய செய்திகள் இதில் உள்ளன. viii. 155/1892/II.

△2: 864

**சுந்தரேசையா பந்துலு**

44. i. வருஷாதி நூல் : முதற் பதிப்பு ; ii. சி. கன்னியப்ப முதலி ; கமலாலய விலாசம் பிரஸ் ; iii. ஜூலை, 1879 ; iv. உ.ப. 192 ; v. 16 mo ; vi. 0–2–0 ; vii. அறுபது ஆண்டுச் சாதகக் குறிப்புக்களைக் கொண்டு முன்கூட்டியே பலாபலன்களை அறிவிக்கும் நூலாகும். viii. 166/1880/II.

△2: 864

**சுந்தரேஸ்வர சிரௌதி & சிதம்பர ஐயர், என்.**

45. i. *நூற்று இருபது வருடங்களுக்கான பஞ்சாங்க அட்டவணை; முதற் பதிப்பு* ; ii. *பாஸ்டர் அண்டு கம்பெனி, சென்னை* ; iii *ஏப்ரல்,* 1883 ; iv. *உ.ப.* 2 ; v. Folio ; vi. 0–8–0 ; vii. 1764-*ம் வருடத்திலிருந்து* 1883-*ம் வருடம் முடிய உள்ள நூற்று இருபது வருடங்களுக்கான அட்டவணையும் வேறுபல செய்திகளும் கொண்டதாகும். இது ஆங்கிலத்திலும் பதிப்பாகி உள்ளது.* viii. 12/1883/II.

△2:864

**சுப்பிரமணிய வாத்தியார், சி.—தொ. து.**

46. i. *சகாதேவ சாஸ்திரம் : முதற் பதிப்பு* ; ii. கே. என். *எஸ் வரய்பா* ; *ஞானபானு அச்சுக்கூடம், கோயம்புத்தூர்* ; iii. *மார்ச்,* 1894 ; iv. *உ.ப.* 24 ; v. 16 mo ; vi. 0–.–0 ; vii. *பாண்டவர்களில் ஒருவராகிய சகாதேவன் எழுதிய சோதிட நூல்;* viii. 157/1894/I.

△2: 864

**சுப்பிரமணிய ஜோசியலு, எஸ்.**

47. i. *விஹாரி வருட நிற்பய பல போதினி : முதற் பதிப்பு* ; ii. *எஸ். சுப்பிரமணிய ஜோசியலு* ; *இந்து யூனியன் பிரஸ், சென்னை* ; iii. *ஜனவரி,* 1899 ; iv. *உ.ப.* 8 ; v. 8 vo ; vi. 0–1–0 ; vii. *அவ்வருடத்தில் நிகழ்ந்த கிரகப் பெயர்ச்சியின் பலாபலன்கள் முதலியவற்றைக் கூறுவது.* viii. 87/1899/I.

△2:864

**சுவாமிநாதபிள்ளை, ஏ.**

48. i. *ஐயாயிரம் வருஷ அதிசய ரகசியம் : முதற் பதிப்பு* ; ii. *ஏ. சுவாமிநாத பிள்ளை* ; *ஜகத்குரு அச்சுக்கூடம், நடுக்காவேரி* ; iii. *நவம்பர்,* 1897 ; iv. *உ. ப.* 8 ; v. 8 vo ; vi. 0–0–6 ; vii. *கலியுகத்தின் இறுதியில் ஏற்பட இருக்கும் உலக அழிவு குறித்து மக்கள் கொண்ட பீதியைப் பற்றிக் குருசீடர்கள் உரையாடுவதாக அமைந்தது இந்நூல்.* viii. 88/1897/IV.

△2: 864

49. i. **சோதிடக் களஞ்சியம் :** *மூன்றும் பதிப்பு* ; ii. *டி. பரசுராம முதலி* ; *பாப்பிரம முத்திராக்ஷரசாலை, சென்னை* ; iii. *அக்டோபர்,* 1884 ; iv. *உ.ப.* 19 ; v. 8vo ; vi. 0–3–0 ; vii. *சோதிட சாஸ்திரத்தைப் பற்றிக் கூறும் நூல் இது.* viii. 82/1884/IV.

△2: 864

**சோமசுந்தர செட்டி, எம்.**

50. i. ஜோதிட முகூர்த்த விதானம் : முதற் பதிப்பு ; ii. எம். வீராசாமி செட்டி ; மெமோரியல் அச்சுக்கூடம், சென்னை ; iii. செப்டம்பர், 1890 ; iv. உ.ப. 1 ; v. Royal ; vi. 0–2–0 ; vii. சடங்குகளுக்கான நல்ல நேரம், கெட்ட நேரம் பற்றியும், ஒவ்வொரு ராசிக்கான பலாபலன்களும் இன்னோன்ன பலவும் தரப்பட்டுள்ளன. viii. 14/1890/IV.

△2: 864

**தியாகராஜ சோதிட பண்டிதர்**

51. i தியாகராஜ சோதிட ஆனந்த களிப்பு : முதற் பதிப்பு ; ii. டி. சபாபதி பிள்ளை ; மட்டுவார் குழலம்பாள் அச்சுக்கூடம், சென்னை; iii. ஜூலை, 1895 ; iv. செ.மு.ப. 40 ; v. 8 vo : vi. 0–1–6 ; vii. பல்வேறு சோதிடப் பொருள்கள் பற்றிச் சோதிடர் ஒருவர் பாடிய இனிய கீர்த்தனை. viii. 6/1895/III.

△2: 864

**நடராஜ ஜோஸ்யர்**

52. i. ஜாதக அலங்காரம்; ii. சி. முனுசாமி முதலியார் ; மாதவ நிவாச அச்சுக்கூடம், சென்னை ; iii. டிசம்பர், 1884 ; iv உ.ப. 176 ; v. 8 vo ; vi· 0–3–0 ; vii. கிரகங்களினால் ஏற்படும் நன்மை தீமைகளைப் பற்றிக் கூறும் நூல் இது. viii. 286/1885/I.

△2: 864

**நமச்சிவாய முதலி**

53. i. வருஷாதி நூல் : முதற் பதிப்பு ; ii. சி. மாணிக்க முதலி அண்ட் கோ. ; மனோன்மணி விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜூன், 1876 ; iv. உ.ப. 191 ; v. 16 mo ; vi 0–3–0 ; vii. அறுபது வருட பலன்களை உரைக்கும் நூல். இறுதியில் முனிவர் எழுதிய பாடல் ஒன்று சேர்க்கப்பட்டுள்ளது. viii. 85/1876/III.

△2: 864

54. i. வருஷாதி நூல் : இரண்டாம் பதிப்பு ; ii. டி. ரத்ன முதலி; கலைக்ஞான அச்சியந்திர சாலை, சென்னை; iii. நவம்பர். 1884; iv. உ.ப. 160 ; v. 16 mo ; vi. 0–1–9 ; vii. அறுபது ஹிந்து வருடங்களைப்பற்றிக் கூறும் ஒரு பழைய நூலின் மறு பதிப்பாகும் இது. அவ்வருடங்களின் நிகழ்ச்சிகளைக் கூறும் அட்டவணையும் உள்ளது. இது இடைக்காடர் என்னும் முனிவர் செய்ததாய்க் கூறப்படுகின்றது. viii. 166/1881/IV.

△2: 864

நரசிம்மராவ், ஆர்.

55. i. அதிர்ஷ்ட தீபிகை : முதற் பதிப்பு ; ii. ஆர். வெங்கட சுப்பராவ் ; லாரனஸ் அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜூலை, 1892 ; iv. உ.ப. 141 ; v. 12 mo ; vi. 1-0-0 ; vii. தெலுங்கில் தொகுக்கப்பட்ட சோதிடம், நிமித்தம், கனவுகள், ரேகை சாஸ்திரம் பற்றிய நூல் ஒன்றின் தமிழ் மொழி பெயர்ப்பு: viii. 81/1892/III.

△2: 864

56. i. நல்ல நாள் கெட்ட நாள் பார்க்கும் கெட்ட பழக்கம் : (Folly of observing lucky and unlucky Days) ; ii. எம். ஆர். டி. அண்டு பி. சொசைட்டி ; எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை; iii. டிசம்பர், 1898 ; iv. உ.ப. 12 ; v. 18mo ; vi. 0-0-1 ; vii. . . . ; viii. 41/1899/I.

△ 2: 864

நாகேந்திர குரு

57. i. சகாதேவ சாஸ்திரம் : மூன்றும் பதிப்பு ; ii. நாகேந்திர குரு; கலா ரத்னாகர பிரஸ், சென்னை ; iii. மே, 1888 ; iv. உ.ப. 38 ; v. 32 mo ; vi. 0-1-0; vii. பாண்டு இளவரசனை சகாதேவனால் எழுதப்பட்டதெனக் கூறப்படும் இந்நூல் தெய்வத் தன்மைகளைப் பற்றியும் மற்றும் சோதிட விஷயங்களைப் பற்றியும் கூறுவதாகும். viii. 82/1888/III.

△ 2:864

58. i. நாட் குறிப்புப் புத்தகம் (Four anna Diary and Cyclists Companion—English, Tamil, Telugu and Hindustani) : முதற் பதிப்பு ; ii. அடிஸன் அண்டு கோ. ; அடிஸன் அச்சுக் கூடம், சென்னை ; iii. நவம்பர், 1893 ; iv. உ ப. 31 ; v. 32 mo ; vi. 0-4-0 ; vii. நான்கு அணு விலையுள்ள இந்த நாட் குறிப்புப் புத்தகத்தில் சைக்கிள் ஓட்டுபவர்களுக்கான அறிவுரைகளும் தரப்பட்டுள்ளன. viii. 129/1894/I.

△ 2:864

நாராயண சுவாமி

59. i. விதானமாலை : முதற் பதிப்பு ; ii. எம். கார்த்திகை ஐயர்; வித்யாவர்த்தினி அச்சுக்கூடம், சென்னை ; iii. நவம்பர், 1881 ; iv. செ.மூ.ப 210 ; v. 12 mo ; vi. 1-4-0 ; vii. அதிர்ஷ்ட காலம், அதிர்ஷ்டமற்ற காலம் ஆகியவற்றைப்பற்றிய ஆய்வுரையுடன்கூடிய ஒரு சோதிட நூலாகும் இது. viii. 95/1881/IV.

△2:864

**புலிப்பாணி**

60. i. புலிப்பாணி சோதிடம்—பகுதி 1 : முதற் பதிப்பு ; ii. ரங்கசாமிப் பிள்ளை & டி. சபாபதிப் பிள்ளை ; மட்டுவார் குழலாம்பாள் அச்சுக் கூடம், சென்னை ; iii. ஜனவரி, 1895 ; iv. உ.ப. 24 ; v. 8 vo ; vi. 0–1–6 ; vii. ஒருவரின் ஜாதகத்தில் உள்ள கிரகங் களுக்கு ஏற்ப அவர்க்கு ஏற்படும் பலாபலன்களை விளக்கும் புலிப்பாணி முனிவர் எழுதிய நூல். viii. 48/1895/I.

△ 2:864

**மதனசாமி ராவ்**

61. i. 1868-ஆம் ஆண்டு அன்றாட நடவடிக்கைப் புத்தகம் : முதற் பதிப்பு ; ii. மதனசாமி ராவ்; ஸ்காட்டிஸ் அச்சுக்கூடம், சென்னை ; iii. பிப்ரவரி, 1868 ; iv. உ.ப. 76 ; v. 4 to ; vi. 0–14–0 ; vii. ஆங்கில முறைப்படி அமைந்த ஒரு நாட் குறிப்புப் புத்தகம் நாட்டு மொழிகளில் இல்லாத குறையைத் தீர்த்த இப் புத்தகம் சென்னையில உள்ள ஓர் அச்சகத்தில் அச்சிடப் பெற்றதாகும். இந்நூல் வெளியீடு குறிப்பிடத் தகுந்த ஒன்றாகும். viii. 88/1868/I.

△ 2:864

**மதுரநாயகம் பிள்ளை**

62. i. நவக்கிரக சித்தாந்தம் : புதிய பதிப்பு ; ii. டி. சபாபதி பிள்ளை; மட்டுவார் குழலாம்பாள் அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜனவரி, 1883 ; iv. செ.மூ.உ.ப. 48 ; v. 16 mo ; vi. 0–1–0 ; vii. நவக் கிரகங்களும் அவைகளால் மனித சமுதாயத்திற்கு ஏற்படும் நன்மை தீமைகளும் பற்றி உரைக்கும் இந்நூல் பாடல் களாகவும் அவற்றிற்கான பொழிப்புரையாகவும் உள்ளது. viii. 4/1883/I.

△2:864

63. i. நவக்கிரக நூல் : புதிய பதிப்பு ; ii. டி. சபாபதி பிள்ளை; மட்டுவார் குழலாம்பாள் அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜனவரி, 1883; viii. 5/1883/I.

△ 2:864

**முனுசாமி முதலி, எஸ்.**

64. i. களவு நூல் : முதற் பதிப்பு ; ii. பி. சுந்தர முதலி; சுந்தர விலாச அச்சுக்கூடம, சென்னை ; iii. மார்ச், 1892 ; iv. உ.ப. 8 ; v. 8 vo ; vi. 0–0–3 ; vii. திருடர்கள் உள்ள இடம் பற்றியும், அவர் திருடிய பொருள்கள் உள்ள இடம் பற்றியும் உணர்த்தும் விதிகளைத் தரும் நூல். viii. 187/1892/II.

△ 2:864

**வெங்கடரமண தாசர், எஸ்.**

65. i. *நிமிட்டுச் சூடாமணியும் சகாதேவ சாஸ்திரமும் : முதற் பதிப்பு;* ii. *சி. வீராசாமி நாயுடு ; வித்தியா விநோத அச்சுக்கூடம், சென்னை ;* iii. *டிசம்பர்,* 1887 ; iv. *உ.ப.+செ.மு.ப.* 52 ; v. 8 vo ; vi. 0–3–0 ; vii. *பாடல்களிலும் உரைநடையிலும் அமைந்த இரு சோதிட நூல்களைக் கொண்ட இந்நூல், வினாக்கள் கேட்கப்படும் காலத்தினை அடிப்படையாகக்கொண்டு அதற்கான பலன்களைக் கூறுவதாகும்.* viii. 80/1888/I.

△2:864

**வெங்கடராம ஜோசியர், டி.**

66. i. *விஜய வருஷ பாணி போதினி : முதற் பதிப்பு ;* ii. *வி. சூரிய நாராயண ராவ் அண்டு பிரதர்ஸ்; வர்த்தமான தரங்கிணி அச்சுக்கூடம், சென்னை ;* iii. *நவம்பர்,* 1892 ; iv. *உ.ப.* 9 ; v. 8 vo ; vi. 0–1–0 ; vii. *வருகின்ற தமிழ் ஆண்டில் மழை, விளைவு போன்ற பலன்களை முன்கூட்டி உணர்த்தவல்ல ஒரு சோதிட நூல்.* viii. 256/1892/IV.

△2:864

**வெங்கடராமையர், பி.**

67. i. *நந்தன வருஷ பாணி போதினி : முதற் பதிப்பு ;* ii. *பி. வெங்கடராமையர் ; கலைக்ஞான முத்திராக்ஷரசாலை, சென்னை ;* iii. *ஜனவரி,* 1892 ; iv. *உ.ப.* 15 ; v. 12 mo ; vi. 0–1–0 ; vii. *நந்தன வருடத் தண்ணீர்ப் பஞ்சத்தைப் பற்றியது.* viii. 70/1892/I.

△2:864

**ஸ்ரீனிவாச ஐயங்கார், என். வி. ஆர்.**

68. i. *ஞான பிரதீபிகை அல்லது ஆரூட சாஸ்திரம் : முதற் பதிப்பு ;* ii. *என். வி. ஆர். ஸ்ரீனிவாச ஐயங்கார் ; மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை;* iii. *அக்டோபர்,* 1899 ; iv. *செ.மு. உ.ப.* 144 ; v. 8 vo ; vi. 1–4–0 ; vii. *கிரகங்களைக்கொண்டும், ஒருவருடைய நட்சத்திரத்தைக்கொண்டும், அவருக்கு வருவன பற்றி விளக்கும் வடமொழி சோதிட நூல் ஒன்று தமிழ் விளக்கத்துடன் உள்ளது.* viii. 104/1899/IV.

△2:864

**ஹோபுஷ், இ. எப்.**

69. i. *தரங்கம்பாடி மிஷன் பஞ்சாங்கம்*—(Tranquebar Mission Almanac for 1868) 1868-*ம் ஆண்டிற்கு முதற் பதிப்பு ;* ii. *இ. எப். ஹோபுஷ் ;* **ஜர்மன் மிஷன்** *அச்சுக்கூடம், தரங்கம்*

பாடி ; iii. ஜனவரி, 1868 ; iv. உ.ப. 26 ; v. 12 mo ; vi. 0–1–0 ; vii. இது ஐரோப்பிய முறைப்படி அமைந்த கையடக்கப் பஞ்சாங்கம் ஆகும். ஆங்கிலத்திலும் தமிழிலுமாக உள்ளது. viii. 48/1868/I.

△2:864

## 133·5 [1] சோதிடம்—சாமுத்திரிகா இலட்சணம்

**அருணாசல முதலியார்**

70. i. புருட சாமுத்ரிகா லட்சணம் : இரண்டாம் பதிப்பு ; ii. டி. ரத்ன முதலியார் ; கலைக்ஞான அச்சியந்திரசாலை, சென்னை ; iii. டிசம்பர், 1880 ; iv. உ.ப. 20 ; v. 8 vo ; vi. 0–1–0 ; vii. மனிதருடைய அங்கலட்சணங்களைக் கொண்டு அவர்களது அதிர்ஷ்டத்தைத் தீர்மானிப்பதும், கைரேகை முதலிய சாத்திரங் களைப் பற்றிக் கூறுவதுமான நூல். viii. 98/1881/II.

△2:864

71. i. சாமுத்ரிகா லட்சணம்—(The Physiognomy or the art of fortune-teller) : முதற் பதிப்பு ; ii. எஸ். பி. நரசிம்மலு நாயுடு; இரசஞாட் அச்சுக்கூடம், கோயம்புத்தூர் ; iii. மே, 1882 ; iv. உ.ப. 85 ; v. 16 mo ; vi. 0–8–0 ; vii. ஒருவனது முகத்தையும், அவயவங்களையும், கைரேகைகளையும் கொண்டு அவனது விதிப் பயன்களையும் மற்றைய பலன்களையும் கூறும் நூலாகும் இது. viii. 61/1882/III.

△2:864

**தியாகராய முதலி, பி.**

72. i. புருஷ சாமுத்ரிகா லட்சணம் : இரண்டாம் பதிப்பு ; ii. பாஸ்டர் அணடு கம்பெனி, சென்னை ; iii. ஜூன், 1879 ; iv. உ.ப. 40 ; v. 32 mo ; vi. 0–4–0 ; vii. மனிதர்களுடைய உருவ, உடலமைப்புக்களின் உதவியால் அதிர்ஷ்டம், குணாதிசயங்கள் முதலியவைகளைக் குறிப்பிடும் நூல். viii. 27/1879/III

△2:864

**முனுசாமி முதலி, சி.**

73. i. அங்க குறி சாஸ்திரம்—உரையுடன் : முதற் பதிப்பு ; ii. பி. சிதம்பரம் முதலி ; சிரோமணி விலாசம் அச்சுக்கூடம், சென்னை ; iii. மார்ச், 1893 ; iv. உ.ப.+செ.மு.ப. 122 ; v. 8 vo ; vi. 0–1–0 ; vii. ரேகை சாஸ்திரம், சோதிடம் பற்றிய செய்யுளில் அமைந்த நூலாகிய இது உரையுடன் உள்ளது. உடலில் பல்வேறு அங்கங்களில் உள்ள மச்சம், கோடு, குறிகள் எவ்வாறு பலன் தரும் என்பதையும் விளக்குகிறது. viii. 141/1893/I.

△2:864

## 133·5 [1]—சோதிடம்—நிமித்த நூல்

**அருணாசல முதலியார்**

74. i. துடி நூல் : முதற் பதிப்பு ; ii. சி. மாணிக்க முதலி அண்டு கம்பெனி ; மனோன்மணி விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. ஏப்ரல், 1881 ; iv. செ.மூ.ப. 8 ; v. 16 mo ; vi. 0–0–3 ; vii. தேக சிலிர்ப்பால் உண்டாகும் பலனைப் பற்றிய நூல் இது. viii. 68/1881/III.

△2:864

**சபாபதி சிவாச்சாரி, ஏ.**

75. i. நன்னிமித்தம், பராவல் முதலியன : முதற் பதிப்பு ; ii. ஏ. சபாபதி சிவாச்சாரி ; மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடம், சென்னை ; iii. மே, 1892 ; iv. செ.மூ.ப. 16 ; v. 16 mo; vi. . . . . . ; vii. மூன்று பாடல்கள் அடங்கிய நூல். சிவனது அருள் கிடைப்பதற்கான நன்னிமித்தம் பார்ப்பது பற்றியும், சிவனது அருள் வேண்டிப் பாடும் தோத்திரங்களும், தெய்வத்திடம் அடைக்கலம் புகுவது பற்றியும், இப் பாடல்கள் விளக்குகின்றன. viii. 214/1892/II.

△2:864

76. i. தும்ம நூல் : ஐந்தாம் பதிப்பு ; ii. கருணானந்த சுவாமிகள் & வி. நாரயணசாமி முதலியார் ; பிரபாகர அச்சுக்கூடம், சென்னை ; iii. செப்டம்பர், 1874 ; iv. உ.ப. 16 ; v. 16 mo ; vi. 0–0–6 ; vii. தும்மல், பறவைகளின் ஒலி இவற்றைச் சோதிடத்தோடு பொருத்திக் காட்டும் சோதிட நூல். viii. 86/1874/I.

△2:864

77. i. தும்ம நூல் : இரண்டாம் பதிப்பு ; ii. அருணாசல முதலி & கே. மாணிக்க முதலி அண்டு கம்பெனி ; மனோன்மணி விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜூலை, 1879 ; iv. உ.ப. 12; vii. காகம் கரைதல், கழுதைக் கத்தல், ஆந்தை அலறுதல், பல்லி விழுதல், கரிநாள், வாரசூலை, ராகு காலம், குளிகை காலம், பட்சம், நட்சத்திரத் தியாச்சியம், சயனித்தல், கௌரி பஞ்சாங்கம் இன்னும் வேறு பல நூதன அம்சங்களும் இதில் உள்ளன. தும்மல் பலாபலன்கள் பற்றியும் இந்நூல் கூறும். viii. 161/1879/III.

△2:864

78. i. தும்ம நூல் : நான்காம் பதிப்பு ; ii. டி. இ. பரசுராம முதலி ; பரப்பிரம்ம அச்சியந்திரசாலை, சென்னை ; iii. நவம்பர், 1880 ; iv. உ.ப. 16 ; viii. 110/1880/IV.

△2:864

## 133. 5 [1]—சோதிடம்—பட்சி சாத்திரம்

**நாகேஸ்வர ராவ், கே.**

79. i. *கேரள பஞ்ச பட்சி சாமுத்ரிகா சார சோதிட* **சாஸ்திர** *சங்கிரகம் : முதற் பதிப்பு ;* ii. **ஊ.** *புஷ்பரதச் செட்டி ;* **கலா** *ரத்னாகரம் அச்சுக்கூடம், சென்னை ;* iii. *மே,* 1892 ; iv. *செ.மூ.ப.* 204 ; v. 8 vo ; vi. 1–8–0 ; vii. *சோதிட நூல்களிலிருந்து தெரிந்தெடுத்த அத்தியாயங்களின் தொகுதி. பட்சி சாத்திரம், கை இரேகை சாத்திரம் முதலியன பற்றிய வரை படங்கள் முதலியனவும் உள்ளன. இவை வடமொழி நூல்களினின்று மொழி பெயர்த்து அமைத்தனவாம்.* viii. 129/1892/II.

△2:864

**ரோமரிஷி**

80. i. *விநாடி பஞ்ச பட்சி : முதற் பதிப்பு ;* ii. *டி. சபாபதிப் பிள்ளை ; மட்டுவார் குழலாம்பாள் அச்சுக்கூடம், சென்னை ;* iii. *அக்டோபர்,* 1884 ; iv. *செ.மூ.ப.* 194 ; v. 8 vo. ; vi. 0–6–0 ; vii. *பஞ்ச பட்சிகளின் குரலைக் கொண்டு சகுனம் தெரிந்து கூறும் நூல் இது.* viii. 151/1884/IV.

△2:864

81. i. *விநாடி பஞ்ச பட்சி : இரண்டாம் பதிப்பு ;* iii. *செப்டம்பர்,* 1889 ; iv. *செ.மூ.ப.* 212 ; vi. 0–3–0 ; vii. *கழுகு, ஆந்தை, காகம், சேவல், மயில் ஆகிய இவ்வைந்து பட்சிகளினால் சோதிடம் கூறுவது பற்றிய பாடல்களையும், அட்டவணைகளையும் இந்நூல் கொண்டுள்ளது.* viii. 106/1889/IV.

△2:864

**ஸ்ரீநிவாச ராகவையங்கார்**

82. i . *பஞ்ச பட்சி சாஸ்திரம்* (Abstract of Augury from Five Imaginary Birds) : *முதற் பதிப்பு ;* ii. .......... ; iii. *மே,* 1872 ; iv. *உ.ப.* 1 ; v. 4 to ; vi. 0–2–6 ; vii. *வல்லூறு, ஆந்தை, காகம், சேவல், மயில் ஆகிய ஐந்து பறவைகளின் வரைபடம் சோதிடத்தோடு தொடர்பு படுத்தப்பட்டுள்ளது. இவற்றின் வரிசைக் கிரமத்தை அறியும் வண்ணம் இவை முறையே எ, ஐ, யு, இ, ஒ,* (a, i, u, e, o) *என்ற உயிர் எழுத்துக்களால் குறிக்கப்படுவன. அடுத்து, இவை சந்திர நாட்கள், வாரங்கள்* (Lunar days and weeks) *இவற்றிற்கு ஏற்பவும், இரவு பகல் ஆகிய காலத்திற்கேற்பவும், கட்டிடக் கோடுகள் போட்டுக் காட்டப்பட்டுள்ளன. இப் பறவைகள் ஐந்தும் மேற்கூறிய வரிசைப்படியே, முறையே நகர்ந்து கொண்டும், தின்றுகொண்டும் இருப்பதாகக் கருதப்படுவதால் எந்த ஒரு நிகழ்ச்சிக்கும் உரிய பலாபலனைக் கணித்து அறிந்துகொள்ள லாம். இதுபோன்று இன்னும் நான்கு உள்ளனவாகத் தெரிய வருகிறது.* viii. 17/1872/II.

△2:864

## 133.5 [1]—பல்லி சாத்திரம்

**பால்வண்ண முதலி, எஸ்.**

**83.** i. பல்லி சாஸ்திரமும் ராகு காலம் பார்க்கும் முறையும் : முதற் பதிப்பு ; ii. எஸ். பால்வண்ண முதலி ; ஆரியப் பிரகாசினி அச்சுக்கூடம், திருநெல்வேலி ; iii. செப்டம்பர், 1898 ; iv. உ.ப. 11 ; v. 16 mo · vi. 0-0-6 ; vii. பல்லி சொல்லும் பலனும், பல்லி ஒருவர்மேல் விழுதலால் உண்டாகும் பலனும் விவரிப்பது. தினமும் நேரும் ராகு காலம் பற்றியும் கூறுகிறது. viii. 82/1898/IV.

△2:864

## 133.5 [1]—சோதிடம்—ருது பலன் நூல்

**முனுசாமி முதலி, எஸ்.**

**84.** i. ருது சாஸ்திரம் : முதற் பதிப்பு ; ii. பி. சுந்தர முதலி ; சுந்தர விலாசம் அச்சுக்கூடம், சென்னை ; iii மார்ச், 1892 ; iv. செ.மு ப. 8 ; v. 8 vo ; vi. 0-0-3 ; vii. பெண்கள் ருது வாகும் கால பலன்கள் பற்றிக் கூறுவது. viii. 188/1892/II.

△2:864

## 133·6—சோதிடம்—கைரேகை சாத்திரம்

**இருஷ்ணமூர்த்தி ஆச்சாரி, வி.**

**85.** i. நந்தி நூல் ரேகை சாஸ்திரம் : முதற் பதிப்பு ; ii. டி. சபாபதிப் பிள்ளை ; மட்டுவார் குழலாம்பாள் அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜூலை, 1885 ; iv. செ.மு.ப. 24 ; v. 8 vo ; vi. 0-2-0 ; vii. ஒவ்வொருவருடைய சுக துக்கங்களையும் வெளிப்படுத்தும் வகையில் கைரேகை பார்ப்பதற்கான இந்நூல் பாடல்களால் அமைந்தது. viii. 144/1885/III.

△2:864

**குருசாமி முதலி, எஸ். டி.**

**86.** i. சாமுத்திரிகா சாஸ்திரம்—பகுதி 1 : முதற் பதிப்பு ; ii. எஸ். டி. குருசாமி முதலி ; எம்பிரஸ் ஆப் இந்தியா அச்சுக் கூடம், சென்னை ; iii. மார்ச், 1892 ; iv. உ.ப. 96 ; v. 8 vo. ; vi. 0-8-0 ; vii. வடமொழியில் உள்ள ரேகை சாஸ்திரம் பற்றிய புத்தகம் ஒன்றின் முதல் பகுதி. கையில் உள்ள ரேகையைப் பற்றியும், உடலின் பல்வேறு அங்கங்களில் உள்ள மச்சங்கள் பற்றியும் விவரித்து, அவற்றிற்கான பலாபலன்களை உரைப்பது. viii. 247/1892/I.

△2:864

## 170. [1]—பொது அறநூல்கள்—கவிதை

**காதர் மொகிதீன், ஓ. பி.**

87. i. நீதிநெறி ஆனந்தக் களிப்பு முதலியன: முதற் பதிப்பு; ii. எஸ். விநாயகம் பிள்ளை; சத்தியஞானானந்த சாஸ்வதி அச்சுக்கூடம், பரங்கிப்பேட்டை; iii. ஜூன், 1893; iv. செ.மூ.ப. 12; v. 12 mo; vi. 0–1–0; vii. அறிவுறுத்தும் முறையில் அமைந்த இசைப் பாட்டு. viii. 172/1893/II.

R4

**கொண்டப்ப வாத்தியார், காஞ்சிபுரம்.**

88. i. கபோத வாக்கியம்: முதற் பதிப்பு; ii. பி. வெங்கடராவ்; வர்த்தமான தரங்கிணி அச்சுக்கூடம், சென்னை; iii அக்டோபர், 1869; iv. செ.மூ.ப. 26; v. Demy octavo; vi. 0–2–0; vii. தமிழ்ச் செய்யுட்களால் ஆகிய இந்நூல் புறாவைப் பற்றிய ஒரு நீதி நூலாகும். இராவணனுடைய சகோதரனாகிய விபீஷணன் அடைக்கலம் புககபோது, இராமன் பகைவர்க்கும் அருள்செய்ய வேண்டும் என்று சுக்கிரீவனிடம் கூறும்பொழுது இக் கதையைக் கூறியதாகச் சொல்லப்படுகிறது. viii. 40/1869/IV.

R4

**செந்தில்நாத ஐயர், சி.**

89. i. ஞானரத்னாவளி: முதற் பதிப்பு; ii. எஸ். ஆர். நமச்சிவாய செட்டி; மதராஸ் ரிப்பன் பிரஸ், சென்னை; iii. அக்டோபர், 1888; iv. செமூ.ப. 18; v. 12 mo; vi. 0–1–0; vii. நூற் பெயருக்கு ஏற்றாற்போலவே ஞானக் கருத்துக்களும் நீதி போதனைகளும் நிறைந்த பாமாலையாகும் இந்நூல். viii. 20/1888/IV.

R4

**நரசிம்மலு நாயுடு, எஸ். பி.**

90. i. கோயம்புத்தூர் கற்ற காரிகையர்க்கான நீதிச் செய்யுட்கள் (Moral Poems for the use of educated native Girls of Coimbatore): முதற்பதிப்பு; ii. எஸ. பி. நரசிம்மலு நாயுடு; கிரசண்ட் பிரஸ், கோயம்புத்தூர்; iii. ஜூலை, 1883; iv. செ. மூ.ப. 21; v. 16 mo; vi. 0–1–0; vii. . . . . ; viii. 111/1883/III.

R4

**முகம்மது உசேன் புலவர்**

91. i. பெண் புத்தி மாலை : ஆறாம் பதிப்பு ; ii. வி. நாராயணசாமி முதலியார்; பிரபாகர அச்சுக்கூடம், சென்னை ; iii. செப்டம்பர், 1874 ; iv. செ.மூ.ப. 16 ; v. 8 vo ; vi. 0–1–0 ; vii. முகமதியப் புலவர் ஒருவர் எழுதிய பெண்களுக்கான நீதி நூல். viii. 104/1874/IV.

R4

92. i. பெண்புத்தி மாலை : முதற் பதிப்பு; ii. டி. பரசுராம முதலி ; பரப்பிரம்ம முத்திராக்ஷர சாலை, சென்னை; iii. பிப்ரவரி, 1878 ; iv. செ.மூ.ப 16 ; v. 16 mo ; vi. 0–0–9 ; vii. பெண்களுக்கு நீதி புகட்டும் இந்தப் பாமாலை லப்பைப் புலவர் ஒருவரால் எழுதப் பட்டது. viii. 114/1878/I.

R4

93. i. பெண்புத்தி மாலை : மூன்றாம் பதிப்பு; ii. டி. இ. பரசுராம முதலி; பரப்பிரம்ம அச்சியந்திரசாலை, சென்னை ; iii. அக்டோபர், 1880 ; iv. செ.மூ ப. 16 ; v. 8 vo; vi. 0–0–9 ; vii. முகம்மதிய லப்பைப் பெண்களுக்கான பழக்க வழக்கங்களையும் கடமைகளையும் அறிவுறுத்துவதற்கென எழுதப்பட்ட ஒரு நூல். viii. 101/1880/IV.

R4

94. i. பெண்புத்தி மாலை : மூன்றாம் பதிப்பு ; ii. டி. இ. பரசுராம முதலி; பரப்பிரம்ம அச்சியந்திர சாலை, சென்னை; iii. பிப்ரவரி, 1883 ; iv. செ.மூ.ப. 16 ; v. 8 vo ; vi. 0–0–6 ; vii. பெண்களின் அன்றாட வாழ்க்கையில் அவர்கள் கடைப்பிடிக்கவேண்டிய வழிமுறைகளையும் அவர்கள் விட்டொழிக்க வேண்டிய தீ நெறிகளையும் பற்றிக் கூறும் நூல் இது. viii. 62/1883/II.

R4

**முருகேச முதலி, ஏ. சி.**

95. i. மாதர் நீதி : முதற் பதிப்பு ; ii. சி. சடையாண்டி செட்டி; ரிப்பன் பிரஸ், சென்னை ; iii. நவம்பர், 1886 ; iv. செ மூ.ப. 18; v. 12 mo ; vi. 0–6–0 ; vii. இந்து மாதர்களின் கடமைகளை விளக்குவதாகும் இந் நூல். viii. 52/1886/IV.

R4

**வெங்கடசுப்ப பிள்ளை, ஏ.**

96. i. வேமன வெண்பா : முதற் பதிப்பு ; ii. பி. மங்கபதி நாயுடு ; கலாரத்நாகரம் அச்சுக்கூடம், சென்னை; iii. அக்டோபர், 1892 ; iv. செ.மூ.ப. 50 ; v. 12 mo ; vi. 0–4–0; vii. தெலுங்குக் கவிஞர் வேமனு பாடிய செய்யுட்களின் மொழிபெயர்ப்பு. viii. 62/1892/IV.

R4

